# ஸ்ரீ
# செட்டிநாடு


திங்கள் இருமுறை

சமய வளர்ச்சி, மொழியாக்கம் கருதி உழைப்பது.

மலர்-26]  துன்முகி-ஐப்பசி-9  25-10-56  [இதழ்-1

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன் செட்டியார்




அண்ணல் ஆலவாய், நண்ணி னுந்தனை
எண்ணி யேதொழத், திண்ணம் இன்பமே.

:-சம்பந்தர்


ஒவ்வொரு இரண்டாவது நான்காவது
வியாழக்கிழமைகளில் வெளிவரும்.




## குறிஞ்சி

அன்னை வெறியயர்வதாயினளென்று வரைவுடன் படுக்கலுறுந் தோழி தலைவியிடம் வெறிக்களத்து வரும் வேலனை 'நம் காதலனால் விரும்பப்படேமாய் இருப்பதற்குக் காரணமென்னவெனக் கேட்போமா' எனக்கூறியது

சூருடை நனந்தலைச் சுனைநீர் மல்க
மால்பெய றலைஇய மன்னெடுங் குன்றத்துக்
கருங்காற் குறிஞ்சி மதனில வான்பூ
வோவுக்கண் டன்ன வில்வரை யிழைத்த
நாறுகோள் பிரச மூறு நாடற்குக்
காதல் செய்தலுங் காதல மன்மை
யாதேனிற் கொல்லோ தோழி வினவுகம்
பெய்மணன் முற்றங் கடிகொண்டு
மெய்ம்மலி கழங்கின் வேலற் றந்தே 268

:வெறிபாடியகாமக்கண்ணியார்

தோழீ! மணல் பரப்பிய முற்றத்தைச் சிறப்புச் செய்து மெய் கூறுகின்ற கழங்குக் குறியையுடைய வேலனை அழைத்து வந்திருப்பதால் அச்சத்தையுடைய இடமகன்ற சுனையில் நீர் நிறையும்படியாக மேகம் மழைபெய்துவிட்ட மிக்க நெடிய குன்றத்தில் கரிய காம்பையுடைய குறிஞ்சியினது வன்மையற்ற வெளிய பூ மலையிடத்தே ஓவியன் சித்தரித்தாற் போன்ற வேட்டுவரில்லங்களில் இழைக்கப்பட்ட தேனடைக்கு மணங்கொண்ட தேனூறுகின்ற நாட்டையுடைய தலைவனுக்குக்காதலுண்டாக்கியிருந்தும் அவனாற் காதலிக்கப்படாமைக்குக் காரணம் என்ன என்று வினவுவோம்.




இல்லத்திற் சென்று புக்கா ரிருநிதிக் குவைக ளார்ந்த
செல்வத்தைக் கண்டு நின்று திருமனை யாரை நோக்கி
வில்லொத்த நுதலா யிந்த விளைவெலா மென்கொ லென்ன
வல்லொத்த கண்ட னெம்மா னருடர வந்த தென்றார்

:-திருத்தொண்டர்புராணம்-854

உரை:—'இல்லத்தில் சென்று புக்கார்-வீட்டை அடைந்து உள்ளே புகுந்தார்; இரும் நிதிக் குவைகள்—பெரிய நிதித் தொகுதிகளாக, ஆர்ந்த செல்வத்தைக் கண்டு நின்று-வந்து பொருந்திய செல்வத்தைப் பார்த்து வியப்புற்று நின்று, திருமனையாரை நோக்கி-திருவையனைய மனைவியாரைப் பார்த்து, வில் ஒத்த நுதலாய்—வில்லையொத்த நெற்றியை உடையவளே, இந்த விளைவு எலாம்-இங்கே உண்டாகியிருப்பதெல்லாம், என்கொல் என்ன—எவ்வாறு வந்ததென்று கேட்க, அல் ஒத்த கண்டன்-இருளை ஒத்த திருநீலகண்டனாகிய, எம்மான் அருள் தர-எமது பெருமானது திருவருள் தர, வந்தது என்றார்-வந்தது என்று சொன்னார்' என்பதாகும்.

தெய்வப் புலமைச் சேக்கிழார்பெருமான் திருவாய் மலர்ந்தருளிய திருத்தொண்டர் புராணத்தில், குங்குலியக் கலய நாயனாரது வரலாறு கூறும் புராணம் உலகியலில் தாங்கமாட்டாத வறுமைத் துன்பம் வந்தபோதும், இறைபணி வழுவா தொழுகுவதால் உண்டாகும் பெரும்பேற்றைப் பற்றித் தெளிய அறிவுறுத்துவதாகும். திருத்தொண்டத் தொகையில் இடம் பெற்றுள்ள நாயன்மார்களுள் வறுமைக்காலத்தும் தளராது பணி செய்து பேறுபெற்றவர் ஒன்பதின்மர்-

அவர் இளையான்குடிமாறரும் குங்குலியக்கலயரும் மூர்த்தியும் நமிநந்தியடிகளும் மூர்க்கரும் அதிபத்தரும், கலியரும், கணம்புல்லரும் புகழ்த்துணையுமாவர். இவரல்லாமல் வறுமை துணைக்காரணமாய் நிற்கப் பேறுபெற்ற அரிவாட்டாயர் முதலியோரும் உள்ளனர்.

திருக்கடவூரில் தோன்றிய கலயனாரது அன்பின் திறத்தைத் திருப்பனந்தாளில் எழுந்தருளியுள்ள செஞ்சடையப்பர் வெளிப்படுத்திக் காட்டினர். ஆண்டவன் உகக்குந் திருத்தொண்டுகள் பலவற்றுள் அவனுக்குத் தூபமிடுதலும் ஒன்று. 'விரும்பிநல் விளக்குத் தூபம் விதியினால் இடவல்லார்க்குக், கரும்பினிற் கட்டிபோல்வார் கடவூர்வீ ரட்டனாரே' என்பது தேவாரம்.

புத்திரமார்க்கமென்று சொல்லப்பெறுகின்ற கிரியை நெறியில் நின்று அகப்பூசையும் புறப்பூசையுமாகிய இரண்டனையும் புரிந்து ஒழுகுகின்ற சாதனிகள் ஆண்டவனுக்குத் தூபமிடுதலை மேற்கொள்வர் என்று சிவஞான சித்தியார் கூறுகின்றது. 'புத்திரமார்க் கம்புகலிற் புதியவிரைப் போது, புகையொளிமஞ் சனமமுது முதல்கொண்டு' என்று பூசைக்குரிய பொருள்களை அது குறிப்பிடுவதால் இதனை அறியலாம்.

இறைவனுக்குச் செய்யும் உபசாரங்கள் மூன்று வகைப்படும். அவற்றைச் சோடசோபசாரம், தசோபசாரம், பஞ்சோபசாரம் என்பர் ஆவாகனம், தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, பாத்தியம், ஆசமனீயம், அருக்கியம், புட்பதானம், தூபம், தீபம், நைவேத்தியம், பானீயம், செபசமர்ப்பணம், ஆராத்திரிகை என்பன சோடசோபசாரங்கள்.

மேற்கூறிய ஆவாகனம் முதல் புட்பதானம் வரையுள்ளவற்றைத் தசோபசாரமென்றும் மண், நீர், தீ, காற்று, வானென்னும் ஐம்பெரும் பூதங்களின் கூறுகளாயமைந்த பொருள்களைக் கொடுப்பது பஞ்சோபசாரமென்றும் சொல்லப்பெறும். மலர் முதலியன மண் கூறு. பால் முதலியன நீர்க் கூறு.

தூபம் முதலியன தீக்கூறு. சாமரம் முதலியனகாற்றுக்கூறு. மந்திரம் முதலியன வான்கூறு என்பன உணரத்தக்கனவாம்.

உயிர்களை அநாதியே பற்றி நிற்கின்ற ஆணவ மலத்தினது வாதனையைக் கழற்றுவது ஆண்டவனது கிரியா சத்தி. அதனையே தூபமென்று அருள்நூல்கள் கூறுகின்றன. தூபத்தின் பின்னர்க் கூறப்பெற்ற தீபம் சிற்சத்தியின் வாசமாய் ஞான விளக்கமாய்த் திகழ்வது. அறியாமையை ஒழித்து அறிவைப் பெறும் பொருட்டாகத் தூபதீபங்கள் ஆண்டவனுக்குக் கொடுக்கப்பெறுகின்றன. இதனை 'ஞான விளக்கம் கண்ணுதற்பொருட்டுத் தூபதீபந்துதைந்தினி தளித்து' என்ற சதாசிவரூபத்தால் அறியலாம்.

அகப்பூசையில் பிராணயாமத்தைத் தூபமென்று சொல்லுவர். போக்குவரவோடு கூடியிருக்கின்ற மனமாகிய பாத்திரத்தினிடத்தில் பிராணனாகிய அக்கினியையிட்டுக் கர்வமாகிய பூகையைக் கூட்டுதலே இது. சிவபூசையில் தூபத்தின் இன்றியமையாமையை ஆளுடையபிள்ளையார் 'நறைமலிதரு மளறொடுமுகைநகுமலர் புகை மிகுவளரொளி, நிறைபுனல்கொடு தனைநினைவொடு நியதமும் வழி படுமடியவர்' என்ற தேவாரத்தில் அருளிச்செய்துள்ளார்.

இந்தத் தூபம் ஐந்துவகையான நறுமணப் பொருள்களால் இடப்பெறுவது. அவை கத்தூரி, கருப்பூரம், அகில், சந்தனம், குங்குலியம் என்பனவாம். இதனை 'ஐவகைய தூபங்க ளாவன தாங் குந்துருகந், துய்யபெருங் கருப்பூரந் துன்னியகா ரகில் வெண்மை, யெய்தியசந்தனமினிய குக்குலுவு மெனவறிக 'மெய் யதனுற் றிருவிளக்கைக் காபிலத்தா னிகழ்த்துகவே' என்ற சிவ தருமோத்தரச் செய்யுளாலறியலாம்.

அறுபான்மும்மை நாயன்மார்களில் ஒவ்வொருவரது வரலாறும், ஒவ்வொருவகைச் சிவபுண்ணியச் சிறப்பைப் புலப்படுத்திக் கொண்டிருக்கின்றன. அந்த வகையில் குங்குலியக் கலயநாயனூர்

தூபத் திருப்பணியாற் பெற்ற இம்மை மறுமைப் பேறுகளை அவர் வரலாறு அறிவிக்கின்றது.

மனிதனுடைய முயற்சியொன்றினலேயே இம்மையிற் பெற வேண்டிய பேறுகளைப் பெற்றுவிட முடியுமென்றும், மறுமைப் பேற்றுக்குமட்டும்தான் இறைவன் திருவருள வேண்டப்பெறுவ தென்றும் சொல்லுகின்றவர்கள்-ஏன்-சமயவாதிகள் நம்நாட்டில் இல்லாமல் இல்லை. அனைத்துப் பேறுகளும் ஆண்டவன் திருவருளினலேயே அடையத் தகுவன என்பதற்கும் இந்நாயனாரது வரலாறு ஒரு நல்ல எடுத்துக்காட்டாயிலங்குகின்றது.

இனி, இறைவனுக்குச் செய்யத்தகுந்த திருப்பணிகள் பற்பலவாயிருக்கவும் இவர் தூபப்பணியை மேற்கொண்டிருந்ததற்குள்ள காரணம், சேக்கிழார்பெருமான் திருவாக்கிலிருந்து குறிப்பாலுணரத் தக்க நிலையில் அமைந்திருக்கிறது. நாயன்மார்களது திருவுள்ளங்களையும், அவர்கள் பெற்ற அருட்பேறுகளையும் குறிப்பு-வெளிப்படை ஆகிய இருநிலைகளிலும் புலப்படுத்துவது, ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகளின் நல்லியல்பாகும்.

கலயனரது வரலாறு கூறுகின்ற புராணம், முப்பத்தைந்து செய்யுட்களைக்கொண்டது. இப்புராணத்திற்கு முந்தியது கண்ணப்பநாயனர் புராணம். அப்புராணத்தின் இறுதிச் செய்யுள் இப்புராணத்திற்குத் தோற்றுவாயாக அமைக்கப்பெற்றது. அதையுஞ் சேர்த்துக் கலயனர் முப்பத்தாறு பாடல்களில் இடம் பெறுகின்றார். இவற்றில் குங்குலியத் தூபமிட்ட அவரைப் பெருஞ்செல்வராக ஆக்கி அறிவித்தது வரையுள்ள வரலாறு குறிப்பன பத்தொன்பது பாடல்கள். இப் பத்தொன்பது பாடல்களில் சிவபெருமானை ஏழு இடங்களில் 'கங்கைவேணியார்' என்று சேக்கிழார்பெருமான் குறித்துள்ளார்.

அவை, கண்ணப்பர் புராணத்தில் கலயனரை முதன் முதலாக அறிமுகப்படுத்துகின்ற இடத்தில் 'கங்கைவாற் சடையார் வாழுங் கடவூரிற் கலயர்' என்பதும் கலயனர் தோன்றிய கடவூரை 'எறிநீர்க் கங்கை, தோய்ந்தநீள் சடையார்....நீடியிருப்

பது' என்பதும் கலயனரை 'பெருந்தி யணியும் வேணிப் பிரான்கழல் பேணி... அன்பு கூர்ந்த சிந்தையார்' என்பதும் அவரது பணியை 'கங்கைநீர் கலிக்குஞ் சென்னிக் கண்ணுத கலம்பிராற்குப், பொங்குகுங் குலியத் தூபம் பொலிவுறப் போற்றிச் செல்ல' என்பதும், தாலியை மாறிக் குங்குலியம் பெற்ற மகிழ்ச்சியில் அவர் சொன்னதாக 'ஆறுசெஞ் சடைமேல் வைத்த அங்கணர் பூசைக் கான, நாறுகுங் குலிய மீதே நானின்று பெற்றேன்' என்பதும் குங்குலியத்தைப் புகைத்த மகிழ்ச்சியில் 'சடையவர் மலர்த்தாள் போற்றி யிருந்தனர்' என்பதும், செல்வமாக்கி வைத்த சிவபெருமானை 'கங்கை அலை புனற் சென்னியார்' என்பதுமாம்.

சிவபுண்ணியத்தின் பயனாகப் பொன்பயில்குவையும் நெல்லும் பொருவில் பல் வளனும் பொங்க, மன் பெருஞ் செல்வ மாக்கி வைத்த சிவபெருமான், பின்பு அப்புராணத்திற் சில இடங்களில் குறிக்கப்பெறுகின்றாரென்றாலும், அங்கெல்லாது அவரது கங்கைவேணி நினைவூட்டப்பெறாது 'அல்லொத்த கண்டம், செங்கண்வெள்ளேறு' முதலியமற்றவைகளே நினைவூட்டப்பெற்றுள்ளன.

இவற்றைக் கூர்ந்து நோக்குகின்றபொழுது கலயனார், சிவ பெருமானதுநீர்ச்சடையைஇடையறாதுநினைந்தவரென்பதும்அதனாலேயே தூபப்பணியில்ஆர்வமிக்குடையவராயிருந்தாரென்பதும் அறியக்கிடக்கின்றன. இறைவன் கட்டளைப்படி இல்லத்திற்கு வந்த நாயனார், 'யாதொன்று மில்லை யாகி இருபக லுணவு மாறிப் பேதுறு மைந்தரோடு பெருகுசுற் றத்தை நோக்கிநெற் கொள்ளத் தாலியைத் தந்து விடுத்த மனைவியார் மெருஞ்செல்வத்திற்கிடையே திருமகளென நிற்பதைக் கண்டார்.

விச்சின்றி விளைவுசெய்பவன் இறைவனொருவனே யாதலின் தேடாது சேர்ந்துள்ள செல்வத்தைப் பார்த்து 'இந்தவிளைவெல்லாம் எவ்வாறு வந்தது' எனக் கேட்டார் நாயனார். எல்லாரும் சாவ எழுந்த நஞ்சையுண்டு காத்தது திருநீலகண்டம்! அதனை நம்பினவர்களுக்குப் பட்டினிச்சாவு எங்ஙனம் நிகழும்? ஆகவே 'நீலகண்டம் திருவருள், நாம் வாழ இதைத் தந்தது' என்று அம்மையார் கூறியது சரிதானே!

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

எல்லா மொழிகளும் போன்று சம்ஸ்கிருதமும் ஒரு மொழி. ஒவ்வொரு மொழியும் ஒவ்வொரு கூட்டத்தாருக்குத் தாய். ஆனால் சம்ஸ்கிருதம் மலடியா? அதற்கும் பிள்ளைக ளிருக்கவே செய்கின்றனர். அவருங் கோடானுகோடிப்பேர். ஆனால் ஒரு கூட்டத்தாரைச் சுட்டி அவருக்கே அது தாயென்பார் நவீனர். அக்கூட்டத்தார் பிரதேசந்தோறும் வழிவழியாயிருந்து வாழ்கின்றனர். ஒரு பிரதேசமொழி அங்கு வாழ்கின்ற அவருக்குந் தாய்மொழியாகவே யிருந்துவருகிறது. ஆகலின் பிரதேசமொழி யொன்று, சம்ஸ்கிருதமொன்று ஆக இரண்டு தாய்மார் அவருக்கு உளராகின்றனர். தமிழகத்தை யெடுத்துக்கொள்க. இங்குள்ள அவருக்குத் தமிழும் புரிகின்றது உள்ளத்தைத் தொடுகின்றது; சம்ஸ்கிருதமும் அப்படியே. இங்ஙிலே மற்றப் பிரதேசங்களிலுள்ள அக்கூட்டத்தாரிடமுங் காணப்படும். அவர் நீங்கலாக மற்ற மக்களனைவருக்கும் அவரவரின் பிரதேசமொழி யொன்றே தாய். அங்ஙனங்கொள்ளுமாறு நவீனர் அத்தனை மக்களையும் அவமானத்துக்குட்படுத்துகிறார். சம்ஸ்கிருதத்துக்கு அக்கூட்டத்தினர்மாத்திரந்தான் பிள்ளைகளென்பது தவறென முன்னரே விஸ்தாரமாக விளக்கப்பட்டது.

அக்கூட்டத்தினருக்கு இரண்டு தாய்மாருளரென்பதை நவீனரே சம்மதிக்குமாறு அவருடைய கொள்கை அவரையே நிர்ப்பந்திக்கிறது. அங்ஙனமாக ஏனையோர்க்கும் இரண்டுதாய்மாரிருத்தல் என் கூடாது? தமிழனுக்குத் தமிழ்போன்று சம்ஸ்கிருதமும் தாய்மொழியே யாம். இன்னொன்று இப்போது தாய்மொழி (Mother-tongue) யென்ற வழங்கற்பாடு குறைந்து பிரதேச பாஷை அல்லது மாகாண மொழி (Regional language)யென்ற பெயரே மிக்கு வழங்கலாயிற்று. சம்ஸ்கிருதம் பாரததேசப் பொதுமொழி (Common language of Bharath)யாகும். ஆகலின் அதுவும் ஒவ்வொரு பிரதேசத்

துக்குஞ் சொந்தமா யிருப்பதில் தடையில்லை. மேலும் தாய் மொழிதான் புரியும், உள்ளத்தைத் தொடும் என்பதென்னை? தமிழகத்தில் பன்னூறுண்டுகளாக வாழ்ந்துவருகின்றனர் தெலுங்கர் முதலியோர். அவருட் பெரும்பாலார் தம் தாய் மொழியை அநேகமாய் மறந்துவிட்டனர். அவருட்பலர் தமிழ்ப் பயிற்சியுடையார். அவருக்குத் தமிழ்புரிகிறது, உள்ளத்தைத் தொடுகிறது. ஏன்? தமிழ் அவருக்குத் தாயா? அன்றே. தமிழ ரெல்லாருக்குமே தமிழ் புரிகிறதா? உள்ளத்தைத் தொடுகிறதா? சி-என்-ஏ, இரா-நெடுஞ்செழியன், அன்பழகன் முதலிய தமிழ ருக்குத் திருமுறைகள் புரிவதுமில்லை, உள்ளத்தைத் தொடுவது மில்லை. தேவாரத்திலுள்ள மாலைமாற்று, ஏகபாதம் முதலிய பதிகங்கள் தமிழருக்காயினும் புரிவனவா? உள்ளத்தைத் தொடு வனவா? சைவப்பயிற்சியோடு கூடிய தமிழ்ப்பயிற்சியே வேண் டும். அஃதுடையார்க்கே சைவத் தமிழ்நூல்கள் புரியும்- உள் ளத்தைத் தொடும். அவர்பாலுள்ள நேர்மையான சைவாபிமா னம் வேதசிவாகமாதி சைவநூல்கள் மலிந்த சம்ஸ்கிருதப்பயிற்சி யிலும் அவரை உந்தும். அப்பயிற்சியால் அவருக்கு அதுவும் புரியும், உள்ளத்தைத் தொடும். வெறுந் தமிழ்ப்பயிற்சி தமிழ் வெறியை யூட்டுவதற்கே ஏதுவாகும், தமிழ்ப்பயிற்சியும் சைவப் பயிற்சியும் இல்லாத எல்லாத் தமிழருக்கும் புரிகிற உள்ளத்தைத் தொடுகிற பாடல்கள் சினிமாப்பாடல்களேயாமெனச்சொன்னல் அது குற்றமாகாது. வசனங்களாயின் கொச்சைத்தமிழ், இழி வழக்கு என்பனவே யென்றல் அதுவுஞ் சரியே. வழிபாடு அம் முறையி லிருக்கவேண்டுமென நவீனர் விரும்புகிறர். ‘மக்க ளுக்கு இலக்கியம் பயன்படல்வேண்டும் என்பதற்காக இலக்கி யத்தை நமது தரத்திற்குத் தாழ்த்திக்கொணரக் கூடாது. நாம்தான் நமது தரத்தை இலக்கியங்களின் தரத்திற்கேற்ப உயர்த்திக்கொள்ளல் வேண்டும்... இலக்கியங்களின் தரம் குறையுமானல் அது நமது வாழ்க்கையின் தரத்தையுங்குறைக் கும் என்பதை உணர்தல்வேண்டும்’ (6-9-55 தினமணி) என்கி றர் இன்னெரு நவீனர். வழிபாடும் இலக்கியம் போல்வது. அதன் தரமும் மக்களின் தரத்திற்கேற்பத் தாழக் கூடாது. தாழ்ந்தால் வாழ்க்கையில் தெய்வீகமுந் தாழும். நவீ னர் அதை உணர்தல் வேண்டும். (தொடரும்)

## கந்தர்சஷ்டி விழாக் கழகம்

தேவகோட்டை நகரச் சிவாலயக் கந்தர்சஷ்டி விழாவில் லெக்ஷார்ச்சனை குமார சம்பவ பாராயணம், சொற்பொழிவுகள், இன்னிசை நிகழ்ச்சிகள் முதலியன 2-11-56தொடங்கி10-11-56 வரை நடைபெறும். 2ந்தேதி திரு எல் அழகுசுந்தரம் செட்டியார் தொடக்கஉரையும், செல்வி வயிநாகரம் இராம மீனாட்சி, செல்வன் இராம திருநாவுக்கரசு, திருமுருக கிருபானந்தவாரியார் பேச்சுக்களும், தமிழிசைப்பள்ளி மாணவிகள் நடனமும் நடைபெறும் 3ந்தேதி செல்வி வள்ளியம்மை, நாராயணசாமி ஐயர், டாக்டர் ராஜமாணிக்கனார், ஜி சுப்பிரமணியபிள்ளை பேச்சுக்களும், எம்பார் விஜயராகவாச்சாரியார் கதையும் நிகழும், 4ந்தேதி வித்துவான் சண்முகதேசிகர். முத்துசாமிப்புலவர், எஸ் மகராஜபிள்ளை பேச்சுக்களும்,5ந்தேதி பழநியம்மாள், ஆவி ராம மெய்யப்பசெட்டியார், சின்னஅண்ணாமலை, மணிமேகலை, ரசபதி பேச்சுக்களும், 6ந்தேதி ஏ என் சுப்பிரமணியம், தி இராமானுசம், தி கி சுந்தரமூர்த்திபேச்சுக்களும், வஸந்தகுமாரி இசையரங்கும் நடைபெறும். 7ந்தேதி மைசூர் கௌரி குப்புசாமி மதுரை மணிஅய்யர் இசையரங்குகள் நிகழும். 8ந்தேதி காலை பாலகவி இராமநாதன் செட்டியார் தலைமையில் பண்டிதமுத்து வேங்கடாசலமய்யர், சுப அண்ணாமலை எம் ஏ, கே என் பாலசுப்பிரமணியம், சி பிருந்தாதேவி பேச்சுக்களும், இரவு காருகுறிச்சி அருணாசலம்குழுவினர் நாதசுரமும், 9ந்தேதி உமையாள் வீணையும் டி ஆர் நவநீதம் புல்லாங்குழலும் டி கே ரெங்காச்சாரியசர் பாட்டும் 10ந்தேதி எம் கே லெக்ஷிமி, வி அலர்மேலு சி வி கிட்டப்பா இசையரங்குகளும் குமாரி நளினி பரதநாட்டியமும் நடைபெறும்.

## நமது வாழ்த்து.

க. முத்துப்பட்டணம் திரு சொ நாராயணன் செட்டியாரவர்கள் புதல்வி கலைச்செல்வி சரசுவதிக்கும் பலவான்குடி திரு, வெ வெ வெ வேலப்பசெட்டியாரவர்கள் புதல்வன் செல்வன் நாச்சியப்பன் பி இக்கும் 18-10-56ல் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. மணமக்கள் மக்களொடு மகிழ்ந்து மனையறங் காத்து நெடிதுவாழ ஆண்டவனை வேண்டுகிறோம்.



உ

சிவமயம்

பாலருவாயர் துணை

'அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து'

சந்தா:

உள்நாடு ரூ—3

வெளிநாடு ரூ—6

# செட்டிநாடு

துன்முகி ஐப்பசி-9

# மெய்கண்ட சிவம்.

சைவசித்தாந்த ஒளியைத் தமிழ்நிலத்திற் பரப்பிய ஞானசூரியன் மெய்கண்டதேவநாயனர். திருக்கயிலாய மலையில் சீகண்ட பரம சிவனை ஞானசாரியராகக்கொண்டு, திருநந்திதேவர் முதல்வராக அகச் சந்தானம் தோன்றியது. நந்தியம்பெருமான், சனற்குமார முனிவர், சத்தியஞான தெரிசனிகள், பரஞ்சோதிமுனிவர் ஆகிய நால்வரும் மேலுலகத்து ஞானகுரவராவர்.

பரஞ்சோதி முனிவரது பெருங்கருணை, நிலவுலகத்தில் திருக்கயி லாய பரம்பரையை நிலைநிறுத்தியது. அந்த ஞானசாரியரிடம் அருளுப தேசம் பெற்றவர் மெய்கண்ட தேவர். பண்டைநற் றவத்தால் தோன் றிப் பரமனைப் பத்தி பண்ணும் சாமுசித்தராகத் திருப்பெண்ணாகடத் தில் அவர் தோன்றினர்.

வேதாகமங்கள் ஆண்டவனால் அருளிச்செய்யப்பெற்ற முதல்நூல் கள். அவற்றுள் வேதம் பொதுநூல். சிவாகமம் சிறப்புநூல். வேதத் தில் இறைவனது பொதுத்தன்மையும் சிவாகமத்தில் அவனது சிறப் புத்தன்மையும் உணர்த்தப்பெறும். வேதத்தின் முடிபு வேதாந்தமென் றும் சிவாகமத்தின் முடிபு சித்தாந்தமென்றும் சொல்லப்படும்.

வேதத்தை அடிநிலையாக வைத்தே சிவாகமம் எழும்புகின்றதாத லின் அவ்வேத சிவாகமங்களில் வேறுபாடு காணுதலைப் பெரியோர் மேற்கொள்ளார். இதனாலேயே 'வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந் தத் திறனிங்குத் தெரிக்க லுற்றும்' என்று உமாபதி சிவாசாரியசுவாமி கள் சிவப்பிரகாசத்தில் உரைத்தருளினார்கள்.

இவ்வுண்மையை அறியாத வேதாந்திகளிற் பலரும் சித்தாந்திக ளிற் சிலரும் வேதாந்த-சித்தாந்தங்களில் வேறுபாடு கண்டு மயங்கு கின்றார்கள். 'வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை' என்று தாயுமான அடிகள் கூறுகின்ற பெருநிலை உலகத்திலே நிலவுதல் வேண்டும். நந்தியம் பெருமானுக்குச் சீகண்டசிவன் உபதேசித்தது 'வேதப் பொருளே' என அருணாசலபுராண ஆசிரியர் கூறுவார். அது 'வேதத்தி னரும் பொருளை விமலனருள் நந்திக்குப் போதித்த சிவஞான போதம்' என்பதால் அறியப்பெறுகின்றது.

வேதத்தைப் பசுவெனவும் சிவாகமத்தை அதன் பாலெனவும் தேவார திருவாசகங்களை அதிலிருந்து உண்டாகின்ற நெய்யெனவும் சிவஞானபோதத்தை அந்த நெய்யின் சுவையெனவும் அனுபவவாயி லாக உணர்ந்தவரே சிவஞானியராவர்.

இதனால் வேதத்தை விட்ட சிவாகமமும் சிவாகமத்தை விட்ட திருமுறைகளும் திருமுறைகளைவிட்ட சித்தாந்த நூல்களும் இல்லை யென்பது நன்கு அறியப்பெறுகின்றது. வடமொழியிலுள்ள சிவாகம முடிபுகளைத் தெள்ளத் தெளியத் தென்றமிழ் மொழியிற் சிவஞான போதமாகத் தந்து நம்மை உய்யக்கொண்டவர் மெய்கண்டதேவ நாயனார்.

திருமுறைகளிற் பற்பல இடங்களிற் றேடிக்காணவேண்டியன வாயுள்ள பதிபசுபாச உண்மையிலக்கணங்களையும் சாதனம் பயன் முதலியவற்றையும் வரன்முறையாக வைத்துணர்த்துகின்ற சிவ ஞானபோதத்தை வழங்கிப் பரம்பரையாக வருகின்ற சைவநன்மக்க ளின் ஞானசாரியராக விளங்கிக்கொண்டிருக்கின்ற மெய்கண்டதேவ நாயனாரது திருநாள் **2-11-56** ஐப்பசிச்சுவாதி நாளாகும்

அந்தத் திருநாளில் சிவஞானசித்தியுண்டாக அவரது திருவடிகளை வணங்கி வழிபடுவது நமது கடமைகளுள் தலையானதாம்




சண்டேசுவரர் திருமுறை:- திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்தின் வெளியீடு. துன்முகி ஆண்டு விஜயதசமி நினைவு மலர். ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் திருவுளப்பாங்கின்படி இளவரசு வித்துவான் ஸ்ரீமத் மகாலிங்கத்தம்பிரான் சுவாமிகள் அவர்களால் வெளியிடப்பெற்றது. கங்கை கொண்டசோளேச்சரத்தில் உள்ள சண்டேசானுக்கிரக மூர்த்தியின் நிழற்படத்துடன் பன்னிரு திருமுறைகளிலும் சண்டேசரைப் பற்றிய குறிப்புள்ள திருப்பாடல்களைத் தொகுத்துக் குறிப்புரையுடன் இதனை வெளியிட்டுள்ள பேருபகாரம் சைவ உலகத்தின் பாராட்டுதலுக்கும் பணிவுக்குமுரியதாகும்.

## செங்கோல் ஆதீனம்

கிழஆம்பூர் அக் 15- இவ்வூர் ஸ்ரீ மீனாக்ஷி உயர்தரஆரம்பப் பாடசாலை நிர்வாகத்தை இதுவரை பார்த்துவந்த ஸ்ரீமதி பகவதிஅம்மாளிடமிருந்து செங்கோல்மடம் ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக சுந்தரசத்திய ஞானபரமாசாரிய சுவாமிகள் நேற்று ஏற்றூர்கள். ஊர்ப்பெருமக்களும் ஆசிரியர்களும் சந்நிதானத்தை வரவேற்று உபசரித்தனர். முன்னாள் பள்ளிக்கூட ஆய்வாளராக இருந்து பணியாற்றிய ஜே என் பி பிரான்ஸிஸ் பி ஏ எல் டி தலைமையில் ஒரு பேரவை நடந்தது. பல அறிஞர்கள் சொற்பொழிவாற்றினார்கள். சந்நிதானம் அருளாசி கூறுகையில் ஆசிரியர்கள் கடமைபற்றியும் கல்வித்துறையில் தம்மாலான அனைத்தையும் செய்யத்தயார்எனவும் ஆதீனநிர்வாகத்திற்குஒப்படைத்த பகவதி அம்மாளைப் பாராட்டியும் வாழ்த்துரைகூறி முடித்தனர். மாணவிகள் ஆடல்பாடல்கள் நிகழ்ந்தன. தலைமை ஆசிரியர் காசிவிசுவநாதஅய்யர் நன்றியுரை கூறினர்.




# பாராட்டத்தக்கது!

தேவகோட்டை
19-10-56

ஐயா, குன்றக்குடி மடாதிபதி கொண்டுள்ள கூடாநட்பைக் கண்டிக்கும் முறையில் தமிழ்நாடு அருள்நெறித் திருக்கூட்டச் செயலாளரும், திருநெல்வேலி மாவட்ட அருள்நெறித் திருக்கூட்டச் செயலாளருமாகிய சைவத்திருவாளர் S. N. அம்பலவாணப் பிள்ளை அவர்கள் அப்பதவிகளிலிருந்து விலகுவதாகஅருள்நெறித் திருக்கூட்டத் தலைவருக்குச் செய்தியனுப்பியிருப்பதை அறிந்து நான் அவரைப்பெரிதும்பாராட்டுகிறேன். திருக்கூட்டத்தின் மற்ற தொண்டர்களும் 'இடிப்பாரை யில்லாத ஏமரா மன்னன் கெடுப்பாரிலானும் கெடும்' என்ற திருக்குறளை நினைவுகூர்ந்து செய்தக்க செய்வார்களானல் சைவம்வாழும்.

அன்புள்ள,
P. S. சுந்தரம்

# வெட்கப்படவேண்டும்!

புதுவயல்
17-10-56

அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கு, உசிலம்பட்டி அருள்நெறித் திருக்கூட்டத்தாரும் ஷையூர் மாதர் அருள்நெறிக் கழகத்தாரும் குன்றக்குடி அடிகளார், ஈ-வே-ராவுடன் உறவு கொண்டு உழைத்து வருவதைப் பாராட்டித் தீர்மானங்கள் நிறைவேற்றியிருக்கிறார்களாம். 15-10-56ல் தஞ்சையில் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசிய ஈ-வே-ரா சாதிமுறைகள், உருவ வழிபாடு ஆகியவற்றை ஒழிக்கும் முயற்சியைத் தொடர்ந்துமேற்கொள்ளப்போவதாகச் சொல்லியிருக்கிறார். அடிகளார்அவரைப் பாராட்டிய பொன்மலைவிழாவில் புராணம் முதலியன இந்துசமயத்துக்குத் தீங்கு இழைத்துவிட்டன என்று சொல்லியிருக்கிறார். புறத்தில் வேடம் வேறுவேறாகஇருந்தாலும் அகத்தில் கருத்து இருவருக்கும் ஒன்றுதான். அதை ஈ-வே-ராவும் ஒப்புக்கொள்கிறார் திராவிடக்கழகம் செய்ய வேண்டிய பாராட்டை உசிலம்பட்டி அருள்நெறித் திருக்கூட்டம் செய்திருப்பது கண்டு சைவஉலகம் வெட்கப்பட வேண்டியதுதான்.

உண்மையுள்ள,
C. K. மாறன்

## செங்கோல் ஆதீனம் கிளைமடம்

ஓமநல்லூர் அக். 10- பெருங்குளம் செங்கோல்மடம் ஆதீனம் கிளைமடமாகச் சிவபூசைக்கு என ஒரு மடம் கட்டி மந்திரமூர்த்தியா பிள்ளையன் அவர்களின் முன்னவர்கள் தானமளித்தனர். அது ஆதீனபரம்பரையாக அனுபவித்துப்பின்னர் மடத்து அனுபவத்திலிருந்து நீங்கியிருந்தது. பண்ணையார் மீண்டும் மடத்தை ஆதீனம் வசம் ஒப்படைத்துச் சந்நிதானத்தை வரவழைத்து ஆலய தரிசனம் செய்துவைத்து மகேஸ்வரபூசை செய்வித்தும் பாதகாணிக்கையிட்டும் வணங்கினர்கள். சந்நிதானம் பண்ணையாரின் தர்ம சிந்தனையையும், குருபக்தியையும் பாராட்டி ஆசிர்வதித்து வெண்ணீறு அளித்தார்கள். ஏராளமான பொதுமக்கள் வைபவத்தில் கலந்து கொண்டனர்.

## ஆண்டுவிழா

பாப்பான்குளம் அக். 11- செங்கோல்மடம் ஆதீனம் அரங்கநாத உயர்தர ஆரம்பப் பாடசாலையின் 63-வது ஆண்டுவிழா நெல்லை மேற்கு மாவட்டக் கல்விஆணையாளர் திரு,பாலகிருஷ்ண முதலியார் B.A.L T அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு, வெங்கிடசுப்பிரமணியம் M.A.B.T அவர்கள் விழாவைத் துவக்கி வைத்தார்கள். ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகசுந்தரசத்தியஞான பரமாசாரிய சுவாமிகள் வாழ்த்துரையுடன் விழா ஆரம்பித்தது. திரு, வீர சிவசுப்பிரமணியம், கு. அருணசலக்கவுண்டர். இ மு சுப்பிரமணியபிள்ளை ஆகியோர் சொற்பொழிவு ஆற்றினர். மாணவ மாணவிகளின் ஆடல் பாடல்கள் நடந்தன 'தெய்வநீதி' என்ற நாடகம் நடைபெற்றது.

## சந்தணத் தைலத்தின் மதிப்பு

கடந்த ஐந்து வருஷங்களில் இந்தியாவில் உபயோகிக்கப்பட்ட சந்தணத் தைலத்தின் வருஷாந்தர சராசரி அளவு 68,000 பவுண்டு என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது

# நமது இதழ்.

(பாலகவி)

"செட்டிநாடு" என்ற பெயரில் நாட்டுக்குத் தொண்டாற்றும் நல்ல பத்திரிகையொன்றைத் தொடங்க வேண்டுமென்று கருதி ராஜாசர் அண்ணாமலைசெட்டியார், ஆவி. பழ. சிதம்பரம்செட்டியார், சு. அ. சு. இராமநாதன்செட்டியார் ஆதிய பெருமக்கள் "செட்டிநாடு பிரிண்டிங் கம்பெனி லிமிடெட்' என்ற பெயரில் ஒரு கூட்டுறவுக் கம்பெனியைத் தஞ்சாவூரில் 1930ம் ஆண்டில் நிறுவி, அதன் வழியாகச் செட்டிநாடு இதழ் வெளிவந்துகொண்டிருக்கும்படி ஏற்பாடு செய்தார்கள்.

அந்தக் கம்பெனியின் மானேஜிங் டைரக்டராயிருந்த திரு, சு. அ. சு. இராமநாதன்செட்டியார் கம்பெனியின் நிர்வாகப் பொறுப்பைத் தாம் அதிகமாக மேற்கொள்ளாமல் சம்பளச் சிப்பந்திகளிடமாகவே விட்டிருந்தபடியால் சுமார் இருபது ஆண்டுகளுக்குள் கம்பெனிக்குச் சேர்ந்திருந்த பங்குத் தொகை ௹ 29000 கடன்தொகை ௹ 16000 ஆகக் கூடியது ௹ 45000க்கு ௹10000 பெறத்தக்க சொத்துக்கள் போகப் பாக்கி ௹ 35000வரை நஷ்டப்படுகின்றநிலையைக்கம்பெனி அடைந்தது.

அதனால் சென்னை உயர்நீதிமன்றஉத்தரவுப்படி ஷை கம்பெனி கலைக்கப்பெற்றுச் சொத்துக்கள் ஏலத்திற்கு வந்ததில், பெறுமதிக்கும் அதிகமான தொகையைக் கொடுத்து நான் ஏலத்திலெடுக்கும்படியான இன்றியமையாமை ஏற்பட்டது.

அச்சுப்பொருள்கள் முதலியவற்றை ஏலத்திலெடுத்த பிறகு, தொழில்துறையில் அச்சகத்தை நடத்திவர வேண்டுமென்றே நான் நினைத்தேன். நம்நாட்டுப்பெருமக்கள் பலரும் நண்பர்களும் 'செட்டிநாடு' பத்திரிகையை மீண்டும் தொடங்கி நடத்திச் சமயப்பணி-இலக்கியப்பணியை ஆற்றி வரும்படி வற்புறுத்தி வேண்டினார்கள்.

அவர்கள் வேண்டுகோளையேற்று எனது முழுப் பொறுப்பில் பத்திரிகையைத் தொடங்கி நடத்தி வருகின்ற எனக்குச் சென்ற ஆறு ஆண்டுகளில் ஏழாயிரம் ரூபாய்வரை நஷ்டம் ஏற்பட்டி-

ருக்கிறதென்பதை வெட்கத்தோடு சொல்லிக்கொள்ளத்தான் வேண்டியதிருக்கிறது.

பத்திரிகையை அனுப்பச்சொல்லிவிட்டு எத்தனையோ முறை கடிதங்களெழுதியும் வீ. பி. அனுப்பியும் சந்தாத்தராது ஏமாற்றிய பெரியமனிதர் போர்வையுடையவர்கள் பலரை எனக்குச் செட்டிநாடு அறிமுகப்படுத்தியிருக்கிறது. சந்தாத் தொகைக்காக வழக்குப் போடமாட்டேனென்பது அவர்களுக்குத் தெரியாதா?

இந்த நிலையில் பெருநஷ்டத்தைத் தொடர்ந்து அடைய எனக்கும் வலிமையில்லை என்பதைக் கருதி இவ்விருபத்தாரும் ஆண்டுமுதல் 'செட்டிநாடு' திங்களிருமுறை இதழாக, மேலட்டையும் இருபது பக்கங்களும் கொண்டு வெளிவர ஏற்பாடுசெய்துள்ளேன். ஆண்டுச்சந்தா மூன்று ரூபாயாகக் குறைகிறது. இவ்வாண்டுப் புரட்டாசித் திங்களுக்கு மேற்படச் செலுத்தப் பெற்றிருக்கும் ஒருசிலரது சந்தாத்தொகை இந்த விகிதப்படி கணக்குச்செய்து கொள்ளப்பெறும். உண்மையன்புடைய நண்பர்கள் ஒருசிலராயிருப்பினும் அவர்களே கோடிக்கணக்கானவர்களாக எனக்குப்புலப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள் என்பதைப்பணிவோடு தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

## கந்தபுராணப் பிரசங்கங்கள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகளவர்கள் நிறுவியருளியுள்ள அறக்கட்டளையின்படி 3-11-56முதல் 8-11-56வரை மாலைவேளைகளில் மதுரை திருவருள் தவநெறிமன்றக் கூட்டுவழிபாட்டு மண்டபத்தில் திருப்பனந்தாள் செந்தமிழ்க்கல்லூரிப் பேராசிரியர் பண்டித வித்துவான் கு. சுந்தரமூர்த்தியும் காஞ்சிபுரம் குமரகோட்டத்தில் திருப்பனந்தாள் செந்தமிழ்க்கல்லூரித் தலைமைத்தமிழ்ப்பேராசிரியர் வித்துவான் சைவப்புலவர் மு. சுந்தரேசம்பிள்ளையும் கந்தபுராண விரிவுரைநிகழ்த்துவார்கள். மதுரையில் திருஞானசம்பந்தசுவாமிகளாதீனம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரதேசிக பரமாசாரிய சுவாமிகளவர்கள் நாடோறும் தலைமை தாங்கியருளுவார்கள்.




# 'குன்றாக் குமரனர்'

( சித-சேதுராமன் )

[ஆசிரமத்தில் தக்ஷணன் பூக்கட்டிக்கொண்டிருக்கிறுன். குமரனர் அவனருகே வீற்றிருக்கிறர்.]

தக்ஷ: ஸ்வாமி! அடியேனுக்கு ஒரு சந்தேகம்?

கும: சந்தேகம் தீர்க்கத்தானே யாம் இருக்கிறோம்.

தக்ஷ: துறவிகள் எதை விரும்பலாகாது?

கும: மனதை மயக்கும் மங்கையர் உறவையும், பொருள்களின் மேல் உள்ள ஆசையையும், நிலத்தின்மேல் உள்ள பற்றையும் கொள்ளலாகாது.

[தக்ஷணன் எழுந்துசென்று பால்கொண்டுவந்து கொடுக்கிறுன். அதுசமயம் சத்தியசீலர் வருகிறர்.]

தக்ஷ: ஸ்வாமி தங்களைக் காணப் பேரூர் சத்தியசீலர் வந்திருக்கிறர் அனுமதிக்கு ஆக்ஷேபனை ஒன்றுமில்லையே.

கும: அழைத்துவா. [சத்தியசீலர் வருகை]

சத்: பெருந்தவச்செல்வ! என் வணக்கம் உரித்தாகுக.

கும: நீடுவாழி. தக்ஷண! கனியும், பருகப் பாலும் கொண்டு வந்து கொடு.

தக்ஷ: இதோ கொண்டுவருகிறேன் ஸ்வாமி.

கும: தாங்கள் காவியம் என்ன ஆயிற்று. ஏற்றுக்கொண்டான மன்னவன்?

சத்: தாங்கள் முன்னுரைதந்த காவியத்தைக் கருத்துச் சிறிதும் இல்லையென்று ஏற்க மறுத்துவிட்டான்.

கும: என்ன! மறுத்துவிட்டான! கவலையைவிடுங்கள். நானே நேரில் சென்று, குற்றம் என்னவென்று வினவுகிறேன்.

சத்: சரி ஸ்வாமி! சென்றுவருகிறேன்.

கும: நல்லது.

காட்சி-2

[சோமபுரியின் அரண்மனை. மன்னன் வீற்றிருக்கிருன். வாயிற் காவலன் ஓடிவருகிருன்.]

வா காவ: அரசே! தங்களைக்காணக் குமரனுர் வந்திருக்கிருர்.

மன்: குமரனுரா! (எதிர்கொண்டழைக்க ஓடுகிருன்) வருக! வருக! என்பாக்கியமே-பாக்கியம் தங்கள் திருப்பாதம் என் அரண்மனையில் பட்டவுடனே இது பொன்னுகக் காட்சியளிக்கிறது. (அவைக்கு அழைத்து வருகிருன்.) கால்நடையாக ஏன் சுவாமி வரவேண்டும். கட்டளையிட்டிருந்தால் அனுப்பியிருப்பேனே பல்லக்குகளும்-படைகளும்.

கும: முற்றும் துறந்த என்போன்ருர்க்கு ஏனப்பா பல்லக்கும் -படையும். சத்தியசீலர் விஷயத்தில் நீ சிறிது தவறிவிட்டாய்.

மன்: மன்னித்தருளல் வேண்டும். என் மகள் பிறந்ததின விழாவிற்குத் தங்களை அழைக்கச் செய்த உபாயமே இது. காவியம் பொன்னுல்‖ பொறிக்கப்பட வேண்டியது.

கும: மன்ன! நின் பாசத்தை அறியேன். உன் அன்பை அளவிட்டுரைக்கமுடியுமோ?

மன்: சுவாமி! வாருங்கள் ஓய்வு பெறலாம்.

[எழுந்துசெல்லுகின்றனர் இருவரும்]

காட்சி-3

[அரண்மனையின் தனிஅறை ஒன்றில் குமரனுர் வீற்றிருக்கிருர் தக்ஷணன் சகோதரன் சாம்பவன் வருகிருன்.]

சாம்: சுவாமி!

கும: யாரப்பா நீ?

சாம்: தக்ஷணனின் தமையன். என் பெயர் சாம்பவன்.

கும: ஓ! நீதானு. அடிக்கடி தக்ஷணன் உன்னைப்பற்றிக் கூறுவான்.

[அப்பொழுது எங்கிருந்தோ பாடும் குரல் கேட்கிறது.]

கும: யாரப்பா பாடுவது?

சாம்: மகாராணியார் மல்லிகாதேவி சுவாமி

கும: என்ன இனிமை! தேவலோகத்தில் எழும் இன்பப் பேரொலி போன்றிருக்கிறதே!

சாம்: வாருங்கள் சுவாமி! சென்று கேட்கலாம்.

[இருவரும் சென்று ரசித்துக்கொண்டிருக்கின்றனர், ராணி கானத்தை முடித்து எழுந்திருக்கிருள்.]

மல்: வாருங்கள் சுவாமி! தாங்கள் வந்ததைக் கவனிக்கவில்லே.

கும: நாம் சற்று முன்புதான் வந்தோம். கானத்தைக்கேட்டு மெய்மறந்துவிட்டோம். போய்வருகிருேம்.

மல்: சரி சுவாமி.

[குமரனுர் மல்லிகாவின் பேரழகில் ஈடுபட்டுத் தன் சுயநினேவிழந்து தனி இருப்பிடம் ஏகுகிருர்.]

காட்சி-4

[கதிரவன் மறையும் மாலேநேரம். பூக்கள் நிறைந்த சோலேயில் சாம்பவன் அமர்ந்திருக்கிருன். ஒருபக்கம் தென்றல் அசைந்து வருகிறது. மற்ருெருபக்கம் மலர்களின் நறுமணம் மூக்கைத் தொளேக்கிறது. வேருெருமருங்குகாற்றில் மிதந்துவரும் இன்னிசைக்கானம். சாம்பவன் சிந்தனே தன் காதலிவரவை எதிர்நோக்கியிருக்கிறது. இளவரசி மாகினியின் வருகை]

மாகினி: அத்தான்...... (சாம்பவன் மௌனமாயிருக்கிருன்) வானத்தை நோக்கி ஆராய்ச்சிநடத்துகிறீர்களா!

சாம்: ஆராய்ச்சிசெய்ய நானென்ன அவ்வளவு முன்னேறி விட்டேனே!

மா: அத்தான்: என் பிறந்ததின விழாவிற்கு என்ன பரிசளிப்பீர்கள்?

சாம்: அன்பை அணிகலனுக அணிவேன். கண்ணே! உனக்குப் பிறந்ததின விழா-எனக்கோ பிரிந்துவாழும் நாள். நீயோ மன்னன் மகள். நானே-ஏழை. இன்பத்தை எட்டிப்பார்க்கக்கூட முடியாதே.

(தொடரும்)

## உங்களுக்குத் தெரியுமா?

ஆதாரக் கல்வியைப் பிரதான அம்சமாகக் கொண்ட ஆரம்பக் கல்வியின் விஸ்தரிப்புக்காக, இரண்டாவது திட்டத்தில் மொத்தம் 89கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

1955-56ம் ஆண்டில் இந்தியாவிலிருந்து மொத்தம் சுமார் 12.92 கோடி ரூபாய் பெறுமானமுள்ள 30,862 டன் முந்திரிப் பருப்பு வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது.

ஆப்பிரிக்காவிலிருந்து வந்துள்ள 177 மாணவர்கள் இந்தியாவில் தற்போது கல்வி பயின்று வருகின்றனர். இவர்களில் 19 பேர் ஹிந்தி பயின்று வருகின்றனர்.

இந்தியாவில் தற்போது மூன்று தொழில் ஸ்தாபனங்கள் கடிகார உற்பத்தியில் ஈடுபட்டு வருகின்றன. இவை மூன்றும் சேர்ந்து வருஷத்துக்கு மொத்தம் சுமார் 28,000 கடிகாரங்கள் உற்பத்திசெய்ய வல்லனவாகும்.

இந்தியாவில் உள்ள ஜவுளி ஆலைகளில் அமைக்கப்பட்டுள்ள தறிகளின் மொத்த எண்ணிக்கை 1955 ஜனவரி மாதத்தில் 2,02,714ஆக இருந்தது 1956 ஜனவரியில் 2,02,901ஆக உயர்ந்துவிட்டது.

1955ம் ஆண்டில் இந்தியா பிரிட்டிஷ் கிழக்காப்பிரிக்காவுக்கு மொத்தம் 5.33லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள சினிமாப்படங்களை ஏற்றுமதி செய்தது.

பல்வேறு ராஜ்யங்களில் உள்ள கோசதனங்களுக்கு மான்ய உதவியாக மத்திய சர்க்கார் இதுவரை மொத்தம் 3.36 லட்சம் ரூபாய் வழங்கியிருக்கின்றனர்.

கோழிப்பண்ணை அபிவிருத்திக்காக முதலாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் மொத்தம் 33 அபிவிருத்தி நிலையங்களும் விஸ்தரிப்பு நிலையங்களும் ஏற்படுத்தப்பட்டன.

